# சீரும் இசையும்

முனைவர் செ. அ. வீரபாண்டியன்
*M.Sc (Physics), M.Phil (Applied Physics), B.L, P.G.D.J (Journalism & Mass Communication), P.G.C.S (Sociological Theories), Ph.D (Physics of Tamil Music)*
முதல்வர், சுதர்சன் கலை அறிவியல் கல்லூரி, பெருமாநாடு,
புதுக்கோட்டை - 622104 E Mail: pannpandi@yahoo.co.in

## ஆய்வு அறிமுகம்

'தமிழிசையின் இயற்பியல்' ( Physics of Tamil Music) என்ற தலைப்பில் நான் முனைவர் பட்ட ஆய்வில் ஈடுபட்ட போது, திருக்குறள் 821 எனது கவனத்தை ஈர்த்தது. அக்குறள் வருமாறு:

சீர் இடம் காணின் எறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு.

இதற்கு உரையாசிரியர்கள் அனைவரும் 'பட்டடை' என்ற இசை தொடர்பான சொல்லை, வெட்டும் கருவியான 'பட்டரை' எனத் தவறாகக் கருதி உரை எழுதி உள்ளதைக் கண்டேன். இதில் வரும் 'சீர்' என்ற சொல் எனது கவனத்தை மிகவும் ஈர்த்தது. 'பிரச்சினை வேண்டாம்' எனக் கருதி, எனது முனைவர் பட்ட ஆய்வு எல்லைக்குள் இக்குறளைக் கொண்டு வரவில்லை. 1996 செப்டம்பர் 17-இல் எனது முனைவர் பட்ட ஆய்வினை முடித்தேன். அதன்பின் இக்குறள் பற்றிய ஆய்வில் ஈடுபட்டேன். இசை தொடர்பான சரியான விளக்கத்தினைக் கண்டுபிடித்து, முதலில் பேரா. இலக்குவனார் மறைமலை அவர்களிடம் காண்பித்தேன். அவர் பொறுமையாக முழுவதும் படித்து, எனது ஆய்வுமுறையைப் பாராட்டி, இந்த உரையை நீங்கள் உலகிற்கு வெளியிடலாம் என்று அறிவுறுத்தினார். புரட்சிதாசன் நடத்திய 'இசைத் தமிழ்' இதழில் 1997-இல் அது முதலில் வெளிவந்தது. பின்னர் கன்னியாகுமரியில் திருவள்ளுவர் சிலை திறந்தபோது, தமிழக அரசு வெளியிட்ட மலரில் 'பட்டடை' தொடர்பான சான்றுகள் நீக்கப்பட்டு வெளிவந்தது. அதன்பின் திருச்சி 'பெல்' நிறுவன வளாகத்தில் திருவள்ளுவர் சிலை திறந்தபோது, வெளியிட்ட மலரில் அது ஒழுங்காக வெளிவந்தது. தற்போது www.musicresearch.in இணைய தளத்தில் அது தமிழிலும் ஆங்கிலத்திலும் மேலும் தெளிவாக வெளியிடப்பட்டுள்ளது.

அதன்பின் ஒரு சமயம் கல்வெட்டு ஆராய்ச்சியாளர் Dr.பத்மாவதி இல்லத்தில்மறைந்த திரு.வெ.கிருஷ்ணமூர்த்தியைச் சந்திக்க வாய்ப்பு கிட்டியது. அவர் பண்ணிசைத் தொடர்பாக நீண்ட காலமாக தமக்கு விளக்கம் கிடைக்காத கேள்விகளை வரிசையாகக் கேட்டார். அவரின் பெரும்பாலான கேள்விகளுக்கான விடைகளை, மேலே சொன்ன திருக்குறள் 821 ஆராய்ச்சியில் நான் கண்டறிந்திருந்தேன். எனவே அவரின் கேள்விகளுக்கு வரிசையாகப் பதில் சொல்லமுடிந்தது. அதுவே ஒரு மறக்கமுடியாத அனுபவமாக அமைந்தது. கடைசியில் அவர் நான் சொன்ன விடைகளைத் தொகுத்து ஒரு கட்டுரையாகத் தருமாறு கேட்டார். பின்னர் ஒரு முறை அவரைப் பற்றி Dr.பத்மாவதியிடம் கேட்டுத் தெரிந்து கொண்டேன்.

புகழ் பெற்ற 'ஆராய்ச்சி' இதழ் நடத்திய அறிஞர் நா.வானமாமலையின் மாணவரான வெ.கிருஷ்ணமூர்த்தி மின்வாரியப் பணியிலிருந்து விருப்ப ஓய்வு பெற்று, இந்திய கம்யூனிஸ்டு கட்சி ஆதரவாளராக சமூகத்திற்கான ஆய்வுகளில் ஈடுபட்டார். ஒவ்வொரு மாதமும் அறைக்கூட்டம் நடத்தி, ஆய்வுத்தலைப்புகளில் பலரைப் பேச வைத்தார். என்னைப் போன்ற ஆய்வாளர்களைத் தேடிச் சென்று, ஊக்குவித்து, அவர்களின் கட்டுரைகளைப் பெற்று அவரின் 'ஆய்வு வட்ட வெளியீடு'-ஆக ஒவ்வொரு வருடமும் வெளியிட்டு வந்தார். 1996 டிசம்பரில் 'அல்தூஸ்ரின் சித்தாந்தம் முதலிய கட்டுரைகள்' என்ற தலைப்பில் அவர் வெளியிட்ட புத்தகத்தில் ' சீரும் இசையும் 'என்ற எனது கட்டுரை வெளிவந்தது. அக்கட்டுரையைக் கூடுதல் சான்றுகளுடன் விரிவு படுத்தி இதனை எழுதியுள்ளேன். இக்கட்டுரை உருவாவதற்கு அவரே முழு முதற்காரணம் ஆவார்.

## பண் இசைத்தல் - சில அடிப்படைத் தகவல்கள்

தமிழிசையில் பண் என்பது இசைக்கப்படும்பொழுது, பண்ணில் வரும் எழுத்துக்கள் இசைக்கு ஏற்றவாறு ஒலிக்கப்படுகின்றன. இசையில் சீர் வகிக்கும் பங்கு பற்றி அறிந்து கொள்ள, முதலில் சுரஇசை பற்றிய சில அடிப்படைத் தகவல்கள் பற்றித் தெளிவு பெறவேண்டும்.

தமிழிசையில் சுர எழுத்துக்கள் ச(குரல்), ரி(துத்தம்), க(கைக்கிளை), ம(உழை), ப(இளி), த(விளரி), நி(தாரம்) ஆகும். அடைகுறியில் உள்ளவை சுரப்பெயர்களாகும். ச, ரி, க, ம, ப, த, நி என்பவை 7 சுரங்களாகும். இவற்றில் 'ச' மற்றும் 'ப' தவிர்த்து, மற்ற 5 சுரங்களும் இரண்டிரண்டாகப் பிரிந்து கீழ்வருமாறு அமையும்.

ச, ரி1, ரி2, க1, க2, ம1, ம2, ப, த1, த2, நி1, நி2

இவற்றின் எண்ணிக்கை 12. இவை ஸ்வரஸ்தானங்கள் அல்லது சுரநிலைகள் என்று அழைக்கப் படும்.

அதாவது ஒரு ஸ்தாயியில் 7 சுரங்கள் அல்லது 12 ஸ்வரஸ்தானங்கள் உள்ளன.
ஸ்தாயி என்பது தமிழிசையில் 'தானம்' என்றும், மேற்கத்திய இசையில் 'ஆக்டேவ்' ( Octave ) என்றும் அழைக்கப்படுகின்றன.

12 ஸ்வரஸ்தானங்கள் மேலும் பிரிந்து சுருதிகள் ஆகின்றன. சுருதிகள் எண்ணிக்கை 22 எனப் பொதுவாகக் கருதப் படுகின்றன. ச-ப மற்றும் ச-ம உறவு அடிப்படையில் ஒரு தானத்தில் அல்லது ஸ்தாயியில் 25 சுருதிகள் இருப்பதையும், அவற்றில் ஏன் 22 சுருதிகள் மட்டும் தனியாக முக்கியத்துவம் பெறுகின்றன என்பதையும் நான் கணக்கிட்டுக் காண்பித்து உள்ளேன். ( மேலும் விளக்கத்திற்கு படிக்கவும் ' Ancient Music Treasures - Exploration for New Music' )

படம் - 1




இசையில் சுருதியில்தான் இசை ஒலிக்கிறது. சுருதியை நோக்கி வழி நடத்துகின்ற இசை வழிகளாக சுரமும், சுரநிலையும் (அல்லது ஸ்வரஸ்தானமும்) பயன்படுகின்றன. எனவேதான் இசையைத் தொடங்கும் முன் இசைக் கருவிகளில் 'சுருதி சேர்த்தல்' எனும் பணி நடைபெறுகிறது. தமிழிசையில் இது 'நல்லிசை நிறுத்தல்' என்று அழைக்கப்பட்டது என்பதை எனது முனைவர் பட்ட ஆய்வில் நிறுவியுள்ளேன்.

தமிழில் இசைக்கும் மொழிக்கும் இடையிலான நெருக்கமான தொடர்பு இக்கட்டுரையில் வெளிப்பட உள்ளது. அதன் முக்கியத்துவத்தைக் கீழ்வரும் சான்று உணர்த்துகிறது.

"இசையும், மொழியும் நரம்பியல் வழி பின்னிப் பிணைந்துள்ளன."
(Music and Language are neurologically interwined) **மொழியின் தோற்றம்** பற்றிய **ஆய்வு இசையுடன் சேர்ந்து** செய்யப்படும் பொழுது **நிறைய பலனைத் தரும்**. ( the study of language evolution has much to gain from a joint consideration of music.) - The Origins of Music[ - MIT press- 2001- ISBN-10:0-262-73143-6 ISBN-13:978-0-262-73143-0 ]

## எழுத்தின் ஒலி இசையில் வகிக்கும் பங்கு

சீர் இசையில் வகிக்கும் ஆழமான பங்கு பற்றி அறியும் முன், எழுத்தின் ஒலி இசையில் வகிக்கும் பங்கு பற்றி அறிய வேண்டும். இது தொடர்பாக தொல்காப்பியம் (எழுத்து 1:33) தரும் அருமையான சான்று வருமாறு:

'அளபு இறந்து உயிர்த்தலும், ஒற்று இசை நீடலும்,
உள' என மொழிப;- 'இசையொடு சிவணிய நரம்பின் மறைய' என்மனார் புலவர்.

பண் இசைக்கப்படும் பொழுது, இசையொடு பொருந்திய - சிவணிய- சுருதி சேர்க்கப் பட்ட நரம்பான இசைச் சுரத்திற்கும், இசைச் சுரம் ஒலிக்கும் நேரத்திற்கும் உட்பட்டு, பண்ணில் வரும் எழுத்தின் ஒலி முழுமையாகப் பொருந்தி - நரம்பின் மறைய- இசைச் சுரத்தின் ஒலிக்குள் எழுத்தின் ஒலி அடங்க வேண்டும்.

இதே கருத்தைக் கீழ்வரும் சான்றுகள் வலியுறுத்துகின்றன..

" இசையொடு சிவணிய யாழினூலும் ' - பெருங்கதை 1: 32-35

' யாழெழுத்திற் பாவாற் புணர்க்க' - பஞ்ச மரபு 89

இதே கருத்தை கி.பி. 4-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கீழ்வரும் அரச்சலூர் கல்வெட்டும் தெரிவிக்கிறது.

'எழுத்தும் புணருத்தான் மணிய
வண்ணக்கன் தேவன் சாத்தன்.'

' மணிய' என்பது தெளிவாக ஒலித்தலைக் குறிக்கும். 'புணருத்தான்' என்பது ' சிவணிய' என்பதுடன் நெருக்கமான தொடர்புடைய சொல்லாகும். இதில் வரும் 'வண்ணம்'இசை வண்ணத்துடன் தொடர்புடையதாகும். தொல்காப்பியம் செய்யுளியல் பாடல்கள் 204-228 இருபது வகை வண்ணங்களை வரையறுத்துள்ளன.

## அசையின் இசைப்பணி

இசையில் எழுத்தின் ஒலி மேற்சொன்ன பணியை ஆற்றுவதற்கு முதல் படியாக, பண்ணில் வரும் எழுத்துக்கள் அசைகளாகப் பிரிக்கப்படல் வேண்டும்.

பாடலில் உள்ள எழுத்துக்களின் ஒலி இசையில் அசையின் மூலமாகவே ஒலிக்கின்றன என்பதைக் கீழ்வரும் சான்று உணர்த்துகிறது.

" எழுத்து அசைத்து இசைக்கோடலின் அசையே" -யாப்பருங்கலவிருத்தி.

எழுத்தின் ஒலியானது பாடலில் அந்த எழுத்திற்கான இசைச்சுரத்திற்கு ஏற்றாற் போலும் இசைச்சுரம் ஒலிக்கும் நேரத்திற்கு ஏற்றாற் போலும் 'அசைத்து' உருவாவதே அசையாகும். அசையின் ஒலிக்கும் இசைக்குமுள்ள நெருக்கமான தொடர்பு பற்றி தொல்காப்பியத்தில் பல சூத்திரங்கள் உள்ளன.

அசைகள் நேரசை மற்றும் நிரையசை என இரண்டு வகைப்படும். 'தே', 'மா', 'கூ' போன்ற எழுத்தொலிகள் நேரசைக்கு உதாரணமாகும். இரண்டாவது வகை நிரையசை என்று அழைக்கப்படும். 'புளி', 'விளம்', 'கரு' போன்ற எழுத்துக்களின் ஒலிகள் நிரையசைக்கு உதாரணமாகும்.

நேரசை போலின்றி நிரையசையில் இரண்டு தனித்தனி ஒலிகள் ( பு+ளி, க + ரு) அடுத்தடுத்து ஒலிக்கின்றன. நிரை என்பதற்கு ஒரு குறிப்பிட்ட வரிசை என்று பொருள். எனவே நிரையசையில் இரண்டு தனித்தனி ஒலிகள் அடுத்தடுத்து குறைந்த பட்சம் இரண்டு அடுத்தடுத்த இசைச்சுர வரிசைக்கு ஏற்றாற் போல் ஒலிக்க வேண்டும். அதாவது நிரையசையில் ஒலிக்கும் இரண்டு இசைச்சுர ஒலிகளும் தனித்த வாழ்வின்றி இசையில் பிணைக்கப்பட்டு அடுத்தடுத்து ஒலிக்க வேண்டும்.

## அசையும் சீரும்

இந்த இரண்டு வகை அசைகளும் பலவாறு சேர்ந்து தொகுக்கப்பட்டு சீர் என்பதை உருவாக்குகின்றன.

இதனைக் கீழ்வரும் சான்று தெளிவுபடுத்துகிறது.

'ஈர் அசை கொண்டும் மூஅசை புணர்த்தும்
சீர் இயைந்து இற்றது சீர் எனப்படுமே.' - தொல்காப்பியம் செய்யுள் இயல்-11

அசைகள் சேர்ந்து உருவான சீர் பொதுவாக மூன்று வகைப்படும் என்பதைக் கீழ்வரும் சான்று உணர்த்துகிறது.

"இயற்சீர் உரிச்சீர் பொதுச்சீர் என்று
மயக்கற வகுத்த சீர் மூன்றாகும். ' - யாப்பருங்கலம் 8:10

இரண்டு அசைகள் சேர்ந்து இயற்சீரை உருவாக்குவதையும், மூன்று அசைகள் சேர்ந்து உரிச்சீரை உருவாக்குவதையும், நான்கு அசைகள் சேர்ந்து பொதுச்சீரை உருவாக்குவதையும் கீழ்வரும் சான்று உணர்த்துகிறது.

"ஈரசை கூடிய சீர் இயற்சீர்; மூவசைச் சீர் உரிச்சீர்; நாலசைச் சீர் பொதுச்சீர்;'
- யாப்பருங்கலம் (பக்கம் 5964)

அகவற்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா ஆகிய பாக்களிலும் பாவினங்களிலும் சீர் வகிக்கும் பங்கினை யாப்பருங்கலம் விளக்குகின்றது.

அசையும், சீரும் இசையில் வகிக்கும் பங்கினை கீழ்வரும் சான்று தெளிவு படுத்துகின்றது.

' அசையும் சீரும் அளந்து நொடி போக்கி
இசைகொள் பாடலின் இசைந்துட னொழுக'
- பெருங்கதை 4:5: 5-8

அசையும்,சீரும் இசையில் வகிக்கும் பங்கினை கீழ்வரும் சான்று மேலும் தெளிவுபடுத்துகிறது.

' அசையும் சீரும் இசையுடன் சேர்த்தி
வகுத்தனர் உணர்த்தல் வல்லோர் ஆறே.' தொல்காப்பியம் செய்யுள் இயல்-10

எழுத்தின் ஒலி பேச்சொலியில் இடம் பெறுவதற்கும், இசையொலியில் இடம் பெறுவதற்கும் இடையே வேறுபாடு உண்டு. இசையொலிக்கு ஏற்றவாறு எழுத்தின் ஒலியைக் கட்டுப்படுத்துவதில் சீர் முக்கியப் பங்கு வகிப்பதைக் கீழ்வரும் சான்றுகள் விளக்குகின்றன.

' எழுத்து அளவு எஞ்சினும், சீர் நிலை தானே
குன்றலும் மிகுதலும் இல்' என மொழிப. தொல்காப்பியம் செய்யுள் இயல்-41

"இசைநிலை நிறைய நிற்குவது ஆயின்,
அசைநிலை வரையார் சீர் நிலை பெறவே.'- தொல்காப்பியம் செய்யுள் இயல்-26

பண்ணில் வரும் எழுத்துக்கள் சேர்ந்து முதலில் அசைகளை உருவாக்குகின்றன. அதன்பின் அசைகள் சேர்ந்து சீர்களை உருவாக்குகின்றன.

இசையில் எழுத்து, அசை, சீர் ஆகியவற்றின் முக்கியத்துவம் தொடர்பான சூத்திரத்தைக் கீழ்வரும் சான்று உணர்த்துகிறது.

' எழுத்தே அசையே சீரே என்றிவை இழுக்கில்
அவை மூன்றிற்குமென்ப" -சிலப்பதிகாரம் புறஞ்சேரியிறுத்த காதை 110-112 உரை

## சீரும் சுர இசையும்

பண் இசைக்கப்படும் பொழுது, அதன் சுர இசையானது தாள இசையால் வழி நடத்தப்படுகின்றது. பண் இசைத்தலில் சுர இசைக்கும் தாள இசைக்கும் ஏற்ற பாலமாக சீர் செயல்படுகிறது என்பது இந்த ஆய்வில் வெளிப்படுகிறது. இவ்வாறு பாலமாக சீர் செயல்பட வேண்டுமானால், சீரானது சுர இசை, தாள இசை ஆகிய இரண்டுடனும் தொடர்புடையதாக இருக்க வேண்டும். சீரானது சுர இசை, தாள இசை ஆகிய இரண்டுடனும் மிகவும் நுணுக்கமாக தொடர்பு கொண்டுள்ளதைச் சிலப்பதிகாரம் சுட்டிக்காட்டுகிறது. சீர் என்பது பாலை நிலை, பண்ணு நிலை,, வண்ணக் கூறுபாடு, தாளக்கூறுபாடு ஆகியவற்றுடன் தொடர்பு கொண்டுள்ளதைச் சிலப்பதிகாரம் அரங்கேற்றுக்காதை வரி 26 உரை விளக்குகிறது.

முதலில் சீரானது சுர இசையுடன் தொடர்பு கொண்டுள்ளதை விளக்கும் சான்றுகளைப் பார்ப்போம்.

' சீர் அமை பாடற் பயத்தால் கிளர் செவி தெவி" - பரிபாடல் 11:69

'அமை' என்பது 'பொருந்துதல், உடன்படுதல்' ஆகியவற்றைக் குறிக்கும். ' பயத்தால்' என்பது 'இன்பத்தால்' என்பதையும், 'கிளர்' என்பது 'எழுந்த' என்பதையும், ' தெவி' என்பது ' ஒலித்தல்' என்பதையும் குறிப்பன ஆகும். செவிக்கு இன்பம் எழும் வகையில் சீருடன் பொருந்திய பண் இசைக்கப் படுதலை இச்சான்று உணர்த்துகிறது.

' பண் அமை இன் சீர்' - கலித்தொகை 102:35

'இன்' என்பது இனிமையைக் குறிக்கும். 'பண்ணுக்குப் பொருந்திய இனிமையுடைய சீர்.' என்பது இதன் பொருளாகும்.

'ஙைவளம் பூத்த நரம்பு இயைச் சீர்' -பரிபாடல் 18:20

'நைவளம்' என்பது பாலைக்குரிய பண் வகையையும், 'இயை' என்பது பொருந்துதலையும் குறிப்பன ஆகும். 'நைவளம்'என்ற பாலைக்குரிய பண்ணிற்கு ஏற்ற சுரத்திற்குப் பொருத்தமான சீர் என்பது இதன் பொருளாகும்.

பண்ணில் வரும் சொல் இசையில் சீரின் துணையுடன் பொருந்துகிறது. இத்தகைய இனிமையான ( 'தீம்') சொல் ' பண் கொண்ட தீம் சொல்' ( பழமொழி- 16 ) ஆனது. இதுவே ' பண் ஆளும் சொல் ' (ஏலாதி-35) ஆனது.

இதே கருத்தை ' நல் யாழ் நரம்பு இசைத்தன்ன இன் தீம் கிளவி ' என்று அகநானூறு (109: 2) வலியுறுத்துகிறது. கிளவி என்பது சொல்லின் ஒலி வடிவம் (sound format ) ஆகும். இதனைப்
' பண்ணுறும் இன் சொல் ' என்று பெருங்கதை( 3:16: 6 ) தெளிவுபடுத்துகிறது.

இசையில் சீரின் நுணுக்கமான பங்கைக் கீழ்வரும் சான்று தெரிவிக்கிறது.

'வாரியும் வடித்தும் உந்தியும் உறழ்ந்தும்
சீருடை நன்மொழி நீரொடு சிதறி ' - பொருநர் ஆற்றுப்படை 23-24

வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல் ஆகியவை ' இசைக்கரணங்கள்' ஆகும் என்பதைச் சிலப்பதிகாரம் கானல்வரி 12-15 தெளிவுபடுத்துகின்றன. 'நீர்' என்பது இசைப்பண்ணைக் குறிக்கும் என்பதை மதுரைக்காஞ்சி (603-606), சிலப்பதிகாரம் நாடுகாண்காதை (138-140) உரை, சம்பந்தர் தேவாரம் பதிகம் (2:112) ஆகிய சான்றுகள் தெரிவிக்கின்றன.

ஆராய்ந்து அறிதல் என்பது தேர்தல் ஆகும். இத்தகைய திறமையில்லாதவரைத் 'தேரான்' என்று திருக்குறள் (508 & 510 ) குறிப்பிடுகின்றன.

பண் அமைக்கும் இப்பணி ' பண் அமை தேரும் ' ( பதிற்றுப்பத்து- 77:6 )

என்று அழைக்கப்பட்டது. இசை ஒலித்து நடைபெறும் இத்தேர்வில் சீர் முக்கியப் பங்கு வகிப்பதைக் கீழ்வரும் சான்று உணர்த்துகிறது.

' சீர் ஆர் தேர் ' -திணைமாலை நூற்றைம்பது- 5:124

ஆர்த்தல் என்பது ஒலித்தலைக் குறிக்கும்.

இதே வகையில் அமைந்த தேவாரம் சான்று வருமாறு.

'இசையின் கிளவி தேர்வார்' - சம்பந்தர் 170:4

சுர இசையில் சீரின் நுணுக்கமான பங்கினை அடுத்து வரும் சான்றுகள் உணர்த்துகின்றன.

பழந்தமிழ் இலக்கியங்களில் உள்ள சான்றுகளின் அடிப்படையில் சுர இசையில் இழை என்பது ஆழமான பங்கு வகிப்பது தெளிவாகியுள்ளது. ( கூடுதல் விளக்கத்திற்கு படிக்கவும். ' Ancient Music Treasures - Exploration for New Music )

சுர இசையில் சீரின் நுணுக்கமான பங்கு பற்றிய மேற்குறிப்பிட்ட சான்றிற்குக் கூடுதல் விளக்கத்தைக் கீழ்வரும் சான்று தருகிறது.

' இழை பெற்ற பாடினிக்கு
குரல் புணர் சீர்க் கொளைவல்
பாண் மகனும் மே' புறநானூறு 11:11-15

குரல் என்பது 'ச' இசைச் சுரத்தைக் குறிக்கும். கொளை என்பது பாட்டைக் குறிக்கும். இதே வழியில் இன்னொரு சான்று வருமாறு :

' மகர வீணையின் கிளை நரம்பு வடித்த இளி புணர் இன்சீர் '
- மணிமேகலை 19: 24-27

இளி என்பது 'ப ' இசைச் சுரத்தைக் குறிக்கும். அடுத்து சுர இசைக் கருவிகளில் சீரின் முக்கியத்துவம் தொடர்பான சான்றுகளைப் பார்ப்போம். குழல், யாழ் போன்றவை சுர இசைக் கருவிகள் ஆகும்.

குழலின் இசைச் சுர ஒலியானது சீருக்குப் பொருந்தி ஒலிப்பதைக் கீழ்வரும் சான்று உணர்த்துகிறது.

'இமிழ் கண் குழலின் இன் சீர் ' - அகநானூறு 66: 22

இமிழ் என்பது ஒலித்தலைக் குறிக்கும். இதே வழியில் இன்னொரு சான்று வருமாறு :

'ஆயன் உவந்து ஊதும், சீர் சால் சிறுகுழல் ஓசை' - ஐந்திணை ஐம்பது 1: 7

சால் என்பது பொருந்துதலைக் குறிக்கும்.
குழலிசையில் சீரின் பங்கை மேலும் தெளிவாக உணர்த்தும் சான்று வருமாறு :

' ஊது சீர்த் தீம்குழல் இயம்ப ' - பரிபாடல் 22: 40

இயம்ப என்பது ஒலித்தலைக் குறிக்கும். குழல் ஒரு காற்றிசைக் கருவியாகும். அதாவது குழலிசையோன் பாடலில் வரும் சீருக்கு ஏற்றாற் போல் குழல் ஊதுதலைச் செய்ய வேண்டும் என்பது தெளிவாகிறது.

யாழ் ஒரு நரம்பிசைக் கருவியாகும். யாழின் சுர இசையில் சீரின் பங்கினைக் கீழ்வரும் சான்றுகள் விளக்குகின்றன.

' ததும்பு சீர் இன்இயம் கறங்க ' -அகநானூறு 138: 9

கறங்க என்பது ஒலித்தலைக் குறிக்கும். இயம் என்பது யாழைக் குறிக்கும். ததும்பு என்பதும் ஒலித்தலைக் குறிக்கும்.

' சீர் இனிது கொண்டு, நரம்பு இனிது இயக்கி யாழோர் மருதம் பண்ண '
- மதுரைக் காஞ்சி 657-658

## தாள இசையின் பாணியில் தூக்கும் சீரும்

சீர் என்பது சுர இசையுடனும், சுர இசைக் கருவிகளுடனும் நெருக்கமான தொடர்பு கொண்டுள்ளதற்கான சான்றுகளைப் பார்த்தோம். அடுத்து சீர் தாளஇசையுடன் நெருக்கமான தொடர்பு கொண்டுள்ளதற்கான சான்றுகளைப் பார்ப்போம். அதற்கு முதலில் தாளஇசை பற்றிய முக்கியமான அடிப்படைத் தகவல்களைப் பார்ப்போம்.

தாளம் என்பது கால அளவை அடிப்படையாகக் கொண்டது. தாளம் பண்ணை வழி நடத்தும் போது, சீரின் துணையுடன் 'பாணி' ஆகிறது. தாளம் என்பதும் பாணி என்பதும் ஒன்றுடன் ஒன்று தொடர்புடைய இரண்டு வெவ்வேறு சொற்களாகும்.

உதாரணமாக, ஆதி தாளத்தில் 1-2-3-4 என்று கால அளவுகள் தாள வட்டணையில் ( Cycle of Rhythm ) மீண்டும் மீண்டும் சுற்றி வரும். அவ்வாறு சுற்றி வரும் போது, தாளமானது பண்ணை முழவுக் கருவிகளின் துணையுடன் வழி நடத்துகிறது. முழவுக் கருவிகளானது தாள வட்டணையின் கால அளவுக்கு உட்பட்டு, 'த', 'தி', 'தொம்', 'நம்', 'கி', 'ட', 'தத்' என்று பலவகையான கொட்டு ஒலிகளைத் தேவைக்கேற்றாற் போல் ஒலித்து, பண்ணை வழி நடத்துகின்றன. பாடலுக்குப் பொருத்தமான கொட்டு 'கீதாங்கம்' என்றும், ஆடலுக்குப் பொருத்தமானக் கொட்டு 'நிருத்தாங்கம்' என்றும், இரண்டிற்கும் பொருத்தமான கொட்டு 'உபயாங்கம்' என்றும் அழைக்கப் பட்டதைச் சிலப்பதிகாரம் அரங்கேற்றுக்காதை வரி 14 உரை தெரிவிக்கிறது.

பண்ணில் வரும் எழுத்துக்கள் அசைகளாகப் பிரிக்கப்பட்டு, சீர்களாகத் தொகுக்கப்பட்டு பண்ணிசையை எழுப்புவதை முன்னர்ச் சுட்டிக் காட்டினோம்.

தாள வட்டணையின் கால அளவுக்குட்பட்டு முழவுக்கருவிகளில் எத்தகைய கொட்டொலிகள் எழுப்பப்பட வேண்டும் என்பது அசை, சீர் ஆகியவற்றைப் பொறுத்து அமைகின்றன. இதற்கு வழி காட்ட 'தூக்கு' துணைபுரிகிறது.

அசைகளைப் பொறுத்து எழுப்பப்படும் கொட்டொலிகளால் அமைந்த ஒரு தாளச் சிறுகட்டமைப்பானது ( a rhythymic substructure of percussion sound)

ஒரு சீருக்குப் பொருத்தமாக அமையுமானால், அது 'செந்தூக்கு' என்று அழைக்கப்படும்.

இரண்டு சீர்களுக்குப் பொருத்தமாக அமையுமானால், அது 'மதலை' என்று அழைக்கப்படும்.

மூன்று சீர்களுக்குப் பொருத்தமாக அமையுமானால், அது 'துணிபு" என்று அழைக்கப்படும்.

நான்கு சீர்களுக்குப் பொருத்தமாக அமையுமானால், அது 'கோயில்' என்று அழைக்கப்படும்.

ஐந்து சீர்களுக்குப் பொருத்தமாக அமையுமானால், அது 'நிவப்பு' என்று அழைக்கப்படும்.

ஆறு சீர்களுக்குப் பொருத்தமாக அமையுமானால், அது 'கழாஅல்' என்று அழைக்கப்படும்.

ஏழு சீர்களுக்குப் பொருத்தமாக அமையுமானால், அது 'நெடுந்தூக்கு' என்று அழைக்கப்படும்.

இதனைச் சிலப்பதிகாரம் அரங்கேற்றுக்காதை வரி 15-16 உரைக் கீழ்வருமாறு தெரிவிக்கிறது.

" ஒரு சீர் செந்தூக்கு இருசீர் மதலை, முச்சீர் துணிபு, நாற்சீர் கோயில், ஐஞ்சீர் நிவப்பாம், அறுசீர் கழாஅலே, எழுசீர் நெடுந்தூக்கு' என்மனார் புலவர்.

தூக்கு தொடர்பாக அகநானூறு ( 382:3) தரும் சான்று வருமாறு.

' ஒரு தூக்கு இன் இயம் '

மேலே கூறிய 'கொட்டும்', 'அசையும்', 'தூக்கும்' பண்ணின் தாளத்திற்கான கால அளவுடன் 'ஒட்டப் புணர்ப்பது பாணியாகும்' என்பதைக் கீழ்வரும் வரிகள் மூலம் சிலப்பதிகாரம் அரங்கேற்றுக்காதை வரி 16 உரை தெரிவிக்கிறது.

கொட்டும் அசையும் தூக்கும் அளவும்
ஒட்டப் புணர்ப்பது பாணியாகும்.

இதற்கான உரைப் பகுதியில் ஒரு பாணிக்கான மாத்திரை அளவுகள் கொடுக்கப் பட்டுள்ளன. இசையியல் பற்றிய புரிதல் இல்லாதவர்கள், மேற்சொன்ன விளக்கம் தெரியாமல் இந்த மாத்திரை அளவுகள்தான் மேற்சொன்ன சூத்திரத்திற்கான பொருள் என்று தவறாக விளங்கிக் கொண்டுள்ளார்கள்.

தாள இசையில் 'தூக்கு' மூலம் சீர் வகிக்கும் முக்கியப் பங்கினை விளங்கிக் கொள்ள பாணி பற்றிய புரிதல் அவசியமாகும்.

எழுத்துக்கள் ஒலிப்பதற்கு இலக்கணத்தில் ஒலி அளவுகள் உண்டு. எழுத்துக்கள் பண்ணாக இசைக்கப்படும் பொழுது, அசைகளாகப் பகுக்கப்பட்டு, சீர்களாகத் தொகுக்கப்பட்டு இசைக்கு ஏற்றாற் போல் எழுத்துக்கள் ஒலிக்கும் நேர அளவுகள் சீர்களால் கட்டுப்படுத்தப்படுவதைத் தொல்காப்பியச் சான்றுகளின் துணையுடன் முன்னர்ப் பார்த்தோம். தாள இசை பண்ணை வழி நடத்தும் போது, எழுத்துக்கள் ஒலிக்கும் நேர அளவுகளை முழவுக் கருவிகளின் கொட்டொலிகள் மூலம் அசைகள் மற்றும் தூக்குகளின் துணையுடன் பாணியாகக் கட்டுப்படுத்துவதையும் முன்னர்ப் பார்த்தோம். முழவுக் கருவிகளுக்கும் பாணிக்கும் உள்ள தொடர்பு பற்றிய சான்றுகளை அடுத்துப் பார்ப்போம்.

'கைக்கசடு இருந்த என்கண் அகன் தடாரி
இரு சீர்ப் பாணிக்கு ஏற்ப - பொருநர் ஆற்றுப்படை-70

தடாரி என்பது முழவுக் கருவியாகும். அதில் இரு சீர்ப் பொருத்தம் உடைய பாணி வெளிப்பட்டதாக இச்சான்று தெரிவிக்கிறது. இரு சீர்ப் பொருத்தம் உடைய பாணி 'மதலை' என்று அழைக்கப் பட்டதை முன்னர் பார்த்தோம். இதே போல் இன்னொரு சான்று வருமாறு.

சிதாஅர் வன்பின் சிதர்ப்புறத் தடாரி
ஊன் சுகிர் வலந்த தெண்கண் ஒற்றி
விரல்விசைத் தவிர்க்கும் அரவையில் பாணி
- புறநானூறு 381: 12-14

வார்களால் சரியாக இழுத்துக் கட்டப்பட்ட தடாரி என்னும் முழவுக் கருவியில், கை விரலின் வேகத்தைக் கட்டுப்படுத்தி எழுப்பப்படும் குற்றமற்ற (அரவையில்) பாணியை

இச்சான்று உணர்த்துகிறது. முழவுக் கருவிகள் மூலம் வெளிப்படும் தாளஇசையில் சீர் தூக்காக இடம் பெற்று அளக்கப் படுவதைக் கீழ்வரும் சான்று உணர்த்துகிறது.

'ஒத்த குழலின் ஒலி எழ; முழவு இமிழ்;
மத்தரி, தடாரி, தண்ணுமை, மகுளி
ஒத்து அளந்து; சீர் தூக்கி; ஒருவர் பிற்படார்;
நித்தம் நிகழும் நேர் இறை முன் கையில்
அத்தக அரிவையர் அளத்தல் காண்மின்'
- பரிபாடல் 12: 40-45

குழலின் அடிப்படையில் சுருதி சேர்க்கப்பட்ட - நல்லிசை நிறுக்கப்பட்ட- முழவுக் கருவிகளின் தாள இசையில் சீர் தூக்காக இடம் பெற்று அளக்கப்படுவதை, இச்சான்று உணர்த்துகிறது.

தண்ணுமை என்ற முழவுக் கருவி மூலம் வெளிப்படும் தாளஇசை பாணி என்றழைக்கப்பட்டதும், இப்பாணி வழி நடத்தும் பண்ணில் சீர் முக்கியப் பங்கு வகிப்பதையும் கீழ்வரும் சான்று விளக்குகிறது.

'தண்ணுமை பாணி தளராது எழூஉக-
பண் அமை இன்சீர்க் குரவையுள், தெண்கண்ணி, '
- கலித்தொகை 102: 34-35

' தண்ணுமை பாணி ' என்பது பெருங்கதையிலும் (144: 47-48) வருகிறது.

துடி என்பது ஒரு தாள இசைக் கருவியாகும். அது தொடர்பான சான்று வருமாறு :

' கனைக் குரற் கடுந்துடிப் பாணி' -அகநானூறு 159: 9

உடுக்கை என்பது ஒரு தாள இசைக் கருவியாகும். அதன் தாள இசையில் சீர் வகிக்கும் பங்கு தொடர்பான சான்று வருமாறு.

' சீரை தைஇய உடுக்கையர் ' - திருமுருகாற்றுப்படை 3: 1
தைஇய என்பது பொருந்திய என்பதைக் குறிக்கும்.

முழவு என்பது ஒரு தாள இசைக் கருவியாகும். அது தொடர்பான சான்றுகள் வருமாறு.

' பாணி முழவு ' - பரிபாடல் 21:36

' பண் கெழு முழவின் கண் கெழு பாணி '- பெருங்கதை 4: 12:90

கெழு என்பது பொருந்துதலைக் குறிப்பதாகும்.

ஒவ்வொரு தாள இசைக் கருவியும் ஒவ்வொரு தனித்துவமான ( unique ) கொட்டொலிகளை அதன் 'கண்' என்ற பகுதியில் எழுப்பக் கூடியவை ஆகும். எனவே ஒவ்வொரு தாள இசைக் கருவியிலும் வெளிப்படும் பாணியானது அந்தந்த தாள இசைக் கருவியின் கண்ணுக்குப் பொருத்தமாக(கெழு) அமையும்.

எனவே முழவின் கண் கெழு பாணியானது இசைக்கப்படும் பண்ணுக்குப் பொருத்தமாக(கெழு) பண்ணை வழி நடத்தும்.

தாள இசைக் கருவிகள் மட்டுமின்றி, மயில், தேரை போன்ற உயிரினங்கள் எழுப்பும் ஒலிகளிலும் தாள இசை ஒலிப்பதைக் கீழ்வரும் சான்றுகள் தெரிவிக்கின்றன.

'மஞ்ஞை ஒலிச்சீர் ஏய்ப்ப ' -அகநானூறு 393:22

மஞ்ஞை என்பது மயிலையும், ஏய்ப்ப என்பது பொருந்துதலையும் குறிப்பன ஆகும். சீர் என்பது தாளக் கூறுபாட்டையும் குறிக்கும் என்பதை ஏற்கனவே பார்த்தோம்.

' தேரை ஒலியின் மாண்சீர் அமைத்து ' - அகநானூறு 301: 18

அடுத்து சிலப்பதிகாரத்தில் வரும் பாணி தொடர்புடையச் சான்றுகளைப் பார்ப்போம்.

அரங்கேற்றுக்காதை வரி 46-இல் 'பாணி' என்பதற்கு 'இருவகை தாள விகற்பங்களும்' என உரை எழுதப்பட்டுள்ளது. கடலாடு காதை வரி 39-43 உரையில் 'பாணி தூக்குச் சீரென்னும் தாளங்கள்' என்று வருகிறது. கானல் வரி 17-இல் வரும் 'ஏவலன் பின் பாணி யாதென' என்பதற்கான உரையில், வாசிக்கும் தாளம் பாணி எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

பாணியைப் போன்ற சுர அமைப்புடைய பாடல் வகை இருந்ததற்கான சான்றுகளும் சிலப்பதிகாரத்தில் உள்ளன. இவ்வகைப் பாடல்களில் பாணியில் உள்ள கொட்டொலிகளுக்குப் பதிலாக பொருத்தமான சுரஒலிகள் அமைந்திருக்க வாய்ப்புண்டு. அத்தகைய சான்றுகளை அடுத்துப் பார்ப்போம்.

கானல் வரி 24-இல் ' கானல் வரி பாடற்பாணி' என்று உள்ளது. புறஞ்சேரியிறுத்த காதை வரி 110-114 -களில் இரண்டு இடங்களில் ' பாடற்பாணி' வருகிறது. இங்கு பாணியைப் பாட்டு என்று உரையில் குறிப்பிட்டுள்ளனர். ஆய்ச்சியர் குரவை 28-இல் வரும் 'உள்வரிப் பாணி' என்பதற்கு 'உள்வரியாகிய ஒரு பாட்டு' என்று உரை எழுதியுள்ளனர். ஆடலுக்குரிய பாடல் உள்வரிப் பாணியாகும். ஆய்ச்சியர் குரவை 17-இல் வரும் 'முல்லைத் தீம்பாணி'யில் உள்ள பாணிக்கு உரையில் விளக்கமில்லை. ஆடலுக்குரிய பாடலே ஆய்ச்சியர் குரவையில் வரும் முல்லைத் தீம்பாணியுமாகும்.

நீர்ப்படைக்காதை வரி 224-இல் வரும் 'குறிஞ்சிப் பாணி' என்பதற்கு "குறிஞ்சிப் பாடல்' என்று உரை உள்ளது. நீர்ப்படைக்காதை வரி 50-இல் வரும் "கானற்பாணி'க்கு உரையில் விளக்கமில்லை. வரி 230-இல் வரும் 'தொடுப்பே ருழவ ரோதைப் பாணி' என்பதற்கும், வரி 240-இல் வரும் 'குழலின் பாணி' என்பதில் உள்ள பாணிக்கும் உரையில் விளக்கமில்லை. அதே போல் கால்கோட்காதை வரி 208-இல் வரும் 'பறை கட் பேய்மகள் பாணிக்காட' என்பதில் உள்ள பாணிக்கும் உரையில் விளக்கமில்லை.

கானல் வரி 17-இல் வரும் 'ஏவலன் பின் பாணியாதென' என்பதற்கான உரையில், 'வேனிற் பாணி பாட நினைத்தாள்' என்று உள்ளது.

நாடுகாண் காதை கட்டுரை வரி 16-இல் வரும் 'ஒளியுடைப் பாணி' என்பதற்கான உரையாக, அரங்கேற்றுக் காதை வரி 135-இல் வரும் 'சீரியல் பொலிய' என்ற சொற்கள் வருகின்றன. இது சீருக்கும் பாணிக்கும் உள்ள தொடர்பை அறிய துணை புரிகிறது.

யாழ், குழல், மிடற்றுக் கருவி (வாய்ப்பாட்டு) போன்ற சுரஇசைக் கருவிகளில் பாணி இசைக்கப் பட்டதற்கான சான்றுகள் வருமாறு.

' யாழ் ஆர்த்தும் பாணியில் ' - பரிபாடல் 20; 57

' ஆய்க்குழல் பாணியின் ஐது வந்து இசைக்கும் ' - அகநானூறு 225: 8
'குழற்பாணி ' - சிறுபாண் ஆற்றுப்படை 162

' பாடுவார் பாணிச் சீரும் ' - பரிபாடல் 8: 109
'பாடற்பாணி ' - பெருங்கதை 1:55: 62

இவ்வாறு சுர இசைக்கும் தாள இசைக்கும் பாலமாகாவும், சுர இசைக் கருவிகளின் தனித்தன்மைகளையும், தாள இசைக் கருவிகளின் தனித்தன்மைகளையும், கணக்கில் கொண்டும், சீர் என்பது இசையில் முக்கிய பங்கு வகிப்பது தெளிவாகிறது. இவை மட்டுமின்றி சீர் என்பது வண்ணக் கூறுபாட்டுடன் தொடர்புடையது என்பதையும் முன்னர் பார்த்தோம்.

தொல்காப்பியம் செய்யுளியல் பாடல்கள் 204-228 இருபது வகை வண்ணங்களையும், அவற்றில் சீர் வகிக்கும் பங்கினையும் வரையறுத்துள்ளன. குறிப்பாக 228-ஆம் பாடல் கீழ் வருமாறு அமைந்துள்ளது.

"' செய்யுள் மொழியான் சீர் புனைந்து யாப்பின்,
அவ்வகை தானே 'அழகு' எனப்படுமே."

வண்ணம் தொடர்பாகச் சிலப்பதிகாரத்தில் பல குறிப்புகள் உள்ளன. அவற்றில் முக்கியக் குறிப்பு வருமாறு.

" வண்ணம் ஒரு வகையான் மூன்று வகைப்படும். பெரு வண்ணம், இடை வண்ணம், வனப்பு வண்ணமென. அவற்றுள் பெரு வண்ணம் ஆறாய் வரும்; இடை வண்ணம் இருபத்தொன்றாய் வரும்; வனப்பு வண்ணம் நாற்பத்தொன்றாய் (நாற்பத்தொன்பதாய்) வரும்." - சிலப்பதிகாரம் அரங்கேற்றுக் காதை வரி 13 உரை.

ஆனாய நாயனார் புராணம் 953 உரையில் கீழ்வரும் குறிப்பு கிடைக்கிறது.

" பெரு வண்ணம் - நெட்டெழுத்துக்களையே தொடுத்துப் பாடுவது எனவும், இடை வண்ணம் - இடையெழுத்து மிகுதி வருவது எனவும், வனப்பு வண்ணம் எழுத்துக்கள் ஒன்றினோடொன்று பிளவு படாமல் இசைந்து அழகு பொருந்தியிருப்பது எனவும் கூறுப."

பஞ்சமரபு நூலிலும் வண்ணம் பற்றிய குறிப்புகள் உள்ளன.

அடுத்து ஆடலில் சீரின் துணையுடன் பாணி வகிக்கும் முக்கியப் பங்கினைக் கீழ்வரும் சான்று தெரிவிக்கிறது.

'ஆடுவார் ஆடல், அமர்ந்த சீர்ப் பாணி"- பரிபாடல் 8: 109

ஆடலுக்கு ஏற்றாற் போல் பாணியைப் பொருத்துவதில் சீரின் பங்கினை இச்சான்று உணர்த்துகிறது. சீர் என்பது தூக்காக பாணியில் முக்கிய பங்காற்றுவது தொடர்பான சான்றுகளை ஏற்கனவே பார்த்தோம். ஆடலுக்குரிய பாடலும் தாள இசையும் தூக்குகளின் துணையுடன் நெறியுடன் கூடுவதைக் கீழ்வரும் சான்று தெரிவிக்கிறது.

'அக்கூத்துகளுக்குரிய பாட்டுக்களும், அவற்றுக்கு அடைத்த வாச்சியங்களின் கூறுகளும், நூல்களில் விதித்த வழியே தெரிந்து, கூத்தும், பாட்டும், தாளங்களும், தாளங்களின் வழிவந்த தூக்குகளும் தம்மிற் கூடின நெறியையுடைய'
- சிலப்பதிகாரம்- அரங்கேற்றுக்காதை 12-25 உரை

சுரஇசையில் சீரும், தாளஇசையில் தூக்கும் முக்கிய பங்கு வகிப்பது தொடர்பான சான்றுகளைப் பார்த்தோம். ஆடல் என்பது சுர இசைக்கும் தாள இசைக்கும் பொருத்தமாக ஆடப்படுவதாகும். எனவே சீரையும் தூக்கையும் சமன் செய்யும் பணி ஆடலுக்கு அடிப்படையாகும். ஆடலுக்கு இத்தகைய அடிப்படையான வழிகாட்டியாக சமன் செய்து சீர்தூக்கும் கோல் பயன்பட்டது. இது தொடர்பான கூடுதல் விளக்கத்தை www.musicresearch.in இணைய தளத்தில் உள்ள திருக்குறள்-118 உரை விளக்கத்தில் படிக்கலாம்.

## யாப்பிலக்கணத்தின் இசையியல் பரிமாணம் அறிமுகம்

யாப்பிலக்கணத்தில் வரும் எழுத்து, அசை, சீர் ஆகியவற்றின் இசையியல் பரிமாணங்கள் பற்றி பார்த்தோம். இவை தவிர, தளை, அடி, தொடை, நிறை போன்ற சொற்களின் இசையியல் பரிமாணங்கள் பற்றியும் ஆராய வேண்டும். தொல்காப்பியத்தில் ( சொல் 8;12) 'இசைப்பு இசை ஆகும்.' என்ற சூத்திரத்திற்கு உரை இல்லாதது கவனிக்கத்தக்கது. யாப்பிலக்கணத்தில் இசை என்று வரும் இடங்களில் எல்லாம் வெறும் ஒலி என்று பொருள் கொண்டால் இந்த இசையியல் பரிமாணங்கள் விளங்காது. உண்மையில் பழந்தமிழ் இலக்கியங்களில் இசை தொடர்பான வரிகளுக்கு ( Text ) பல இடங்களில் உரைகள் சரியான விளக்கம் தரவில்லை என்பதைப் பல ஆய்வுக் கட்டுரைகள் மூலம் நான் நிறுவி உள்ளேன்.

இசையியல் (Musicology), இசை இயற்பியல் (Physics of Music ) உள்ளிட்ட பல்துறை ஆய்வின் ( cross-disciplinary ) மூலமே பழந்தமிழ் இலக்கியங்களில் இசை தொடர்பான வரிகளுக்குச் சரியான இசையியல் தகவல்களை என்னால் கண்டுபிடிக்க முடிந்தது. யாப்பிலக்கணத்தில் வரும் இசையியல் பரிமாணங்கள் பற்றித் தெரிந்து கொள்ள ' சீரும் இசையும் ' ஒரு தொடக்கமாக அமையும்.

தமிழில் புலவர், பி.ஏ, எம்.ஏ போன்ற படிப்புகளில் தமிழ் இசையியல் (Tamil Musicology ) முறையாகச் சொல்லித்தரப் படுவதில்லை. இசையில் டிப்ளமா, பி.முஸ், எம்.முஸ் போன்ற படிப்புகளில் முறையாகத் தமிழிசை இலக்கணம் சொல்லித்தரப் படுவதில்லை.

இதனால் ஆராய்ச்சி மூலம் வெளிப்பட்ட மேற்கூறிய விளக்கமும், இது போன்ற இசை தொடர்பான பழந்தமிழ் இலக்கியங்களில் உள்ள வரிகளுக்கான விளக்கங்களும், அவற்றின் முக்கியத்துமும் இப்படிப்புகளை முடித்தவர்களுக்கு எளிதில் புரிவதில்லை. சரியான தமிழிசையியல் பாடம் இப்படிப்புகளில் அறிமுகப் படுத்த வேண்டியது அவசியமாகும்.

---